# संस्कृतश्रीः

## पाठमाला–५

# ஸம்ஸ்கிருதஶ்ரீ:

## பாடமாலா-5

ॐ




*Published by*

**SAMSKRIT EDUCATION SOCIETY** [REGD.]



*Head Office :*
98-99 Luz Church Road,
Chennai-600 004.
Phone : **497 11 01**.

*Admn. Office :*
283, T.T.K. Road,
Chennai - 600 018.



IV th Edition] 2002 [Rs. 25-00

## ஸம்ஸ்க்ருதஸ்ரீ பத்திரிகை பாடமாலா

மொழிப்பயிற்சி மிக எளிதானது. கருத்துடன் ஊன்றிப்பயிலத் தொடங்கினால் ஓராண்டிற்குள் மொழி வசப்படத் தொடங்கும். பிறகு மொழியிலுள்ள சிறிதும் பெரிதுமான நூல்களை படித்துப் பழகப்பழக மொழி நன்கு வசப்பட்டுவிடுகிறது. மொழியின் இலக்கணமும் கற்பதற்கு எளிதே. தொடர்ந்து கருத்துடன் ஊன்றி ஈடுபடுவதே இதற்கான ஒரே உபாயம். நாம் நன்கு அறிந்த மொழி ஒன்றின் உதவி கொண்டு வேற்று மொழி கற்பதும் மிக எளிது. அந்தந்த மொழியின் தனிச் சிறப்பும் பழகப் பழகத்தானே புரியும். இதைக் கருத்தில் கொண்டே தமிழின் மூலம் ஸம்ஸ்க்ருதத்தைக் கற்பதற்கு உதவுவது என்ற நோக்குடன் 1977ல் காஞ்சீ காமகோடி பீடாதிபர் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் நல்லாசியுடன் ஸம்ஸ்க்ருதஸ்ரீ துவங்கப் பெற்றது.

பத்திரிகை மூலம் போதித்துத் தபால் மூலம் பயிற்சியில் உதவுவதானது. நேர்முகமாக வகுப்பறைகளில் போதிப்பது போல், எளிதாக அமைய வேண்டுமென்ற கருத்துடன் முயன்றதில் ஓரளவு வெற்றி பெற்றுள்ளோம். தொடர்ந்து இப்பத்திரிகையின் வாசகர் வட்டம் பெருகிவருகிறது.

ஸம்ஸ்கிருதஸ்ரீ பத்திரிகையில் பாடங்களுடன் எளிய சிறிய சிறந்த கட்டுரைகள், ஸம்பாஷணைகள், சிறு நாடகங்கள், மற்றும் செய்யுள்கள், ஸ்தோத்திரங்கள் இவைகளும் இடம் பெற்று வருகின்றன. அவை வாசகர்களுக்கு இலக்கியங்களில் ஈடுபாட்டை வளர்க்க உதவுகின்றன.

ஸம்ஸ்கிருத எழுத்துப்பயிற்சி முதல் உயர்ந்த காவியப் பகுதிகள் வரை எளிய முறையில் பாடங்கள் வரிசையாக அமைக்க பெற்று ஸம்ஸ்கிருதஸ்ரீ பத்திரிகையில் வெளிவந்தன. ஒவ்வொரு பாடத்தின் இறுதியில் அமைந்த பயிற்சிகளை வாசகர்கள் எழுதி எங்களுக்கு அனுப்பித் திருத்தப் பெற்று திரும்பப் பெறுகிறார்கள்.

# संस्कृतश्रीः - पाठ माला - ५

## ஸம்ஸ்கிருதஸ்ரீ பாடமாலா - 5

संस्कृतश्रीः भाषाबोधनाय क्रमशः विवरणं ददाति, यथा स्वयमेव गृहे बालाः कुमाराः वृद्धाश्च अवहिताः भाषामेनां वशीकुर्युः। भाषा न कापि वस्तुतः कठिना मृदुर्वा। भूयोभूयः श्रद्धया नियततया यथा यथा अभियोगः क्रियते, तथा तथा सा वशे भवति। लेखनं भाषणं चेति द्वयं हृद्गतस्य भावस्य परस्मै निवेदनाय उपकुरुते। भाषणाय, अन्यः कश्चन भाषाज्ञः अपेक्ष्यते। लेखनाय न सः अपेक्ष्यते। भाषणे प्रथमं प्रायशः अपभ्रंशो जायते। यदि अन्यः अस्य हितं चिन्तयन् अपभ्रंशं निर्दिशति, स्वयं च निर्दुष्टं संभाषते, तदा भाषणे अपभ्रंशः अपयात्येव। लेखनेऽपि प्रथमं अपभ्रंशाः भवेयुरेव। द्वित्रवारं स्वयमेव लिखितस्य अनुशीलनेन प्रायो दोषाः दृष्टिपथं आयान्त्येव। ततो दोषाणां निराकरणं सुकरमेव। भाषणे नैतत् घटते। चापतो निर्गतः शर इव भाषितं न प्रत्यादातुं शक्यते। भाषणे शक्तेः वर्धनेनैव भाषायां स्वातन्त्र्यं लभ्येत। अतः पाठमालागतान् पाठान् द्वित्राः संभूय पठत। परस्परं अनयैव भाषणं कुरुत। लिखत हृद्गतम्। परस्परं लिखितमनुशीलयत। सन्दिग्धं अध्यापकाय निवेद्य परिष्कुरुत। भाषा भवतां वशे भवेत्।

इतः गद्य - पद्यमयानि प्रकरणानि, कानिचित् पदशो वियोजनं, अन्वयः, सन्धेः समासस्य च निर्देशः तमिलि अर्थः इति क्रमं अवलंब्य पाठ्यन्ते। भवद्भिः स्वतः अवगम्येषु विषयेषु विवरणं न दीयेत।

स्वस्त्यस्तु। शुभमस्तु। ऋद्धिरस्तु। वाक्पटुत्वमस्तु। दुरूहविषयावगाहोऽस्तु। लोकहिते प्रवणताऽस्तु। सर्वत्र शुभभावना स्थिरीभवतु। मङ्गलं नः। मङ्गलं वः॥

पुस्तकजपवटहस्ते वरदाभयचिह्नचारुबाहुलते।
कर्पूरामलदेहे वागीश्वरि शोधयाशु मम चेतः॥

## प्रथमः पाठः — பாடம் 1

## श्रीशङ्करोदन्तम्

प्रथमो भागः।

**गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुः गुरुर्देवो महेश्वरः।**
**गुरुः साक्षात्परं ब्रह्म तस्मै श्रीगुरवे नमः॥ १॥**

गुरुः ब्रह्मा (भवति) गुरुः विष्णुः (भवति) गुरुः देवः महेश्वरः (भवति) गुरुः साक्षात् परं ब्रह्म (भवति)। तस्मै श्रीगुरवे नमः। (महान् ईश्वरः महेश्वरः। श्री युक्तः गुरुः श्रीगुरुः।)

*குரு பிரும்மா, குரு விஷ்ணு, குரு தேவனான பரமசிவன். குருவே பரம்பொருள். அந்த குருவிற்கு நமஸ்காரம்.*

**श्रीगुरुं प्रणिपत्याहं दक्षिणामूर्तिरूपिणम्।**
**शङ्करोदन्तमाख्यास्ये पूर्वाचार्यैः प्रकीर्तितम्॥ २॥**

अहं दक्षिणामूर्तिरूपिणं श्रीगुरुं प्रणिपत्य पूर्वाचार्यैः प्रकीर्तितं शङ्करोदन्तं आख्यास्ये। (दक्षिणामूर्तिः रूपं यस्य तं। पूर्वे आचार्याः तैः। शङ्करस्य उदन्तः, तं।

*நான் தக்ஷிணாமூர்த்தி வடிவமுள்ள பெருமைபெற்ற குருவை வணங்கி முற்காலத்திய பெரியோர்களால் கூறப்பட்ட சங்கராசாரியரின் வரலாற்றைச் சொல்கிறேன்.*

**अस्ति कैलासशिखरे दक्षिणाशामुखः शिवः।**
**वटाधः सनकादिभ्यो मौनेन ब्रह्म बोधयन्॥ ३॥**

कैलास शिखरे दक्षिणाशामुखः शिवः वटाधः सनकादिभ्यः मौनेन ब्रह्म बोधयन् अस्ति। (कैलासस्य शिखरं, तस्मिन्। दक्षिणा च सा आशा च, तस्यां मुखं यस्य, सः। वटस्य अधः। सनकः आदिः येषां ते, तेभ्यः।

*கைலாஸத்தின் சிகரத்தில் தெற்குதிசை நோக்கிய சிவபெருமான் ஆலமரத்தினடியில் ஸனகர் முதலானோருக்கு மௌனமாகப் பரம்பொருளைப் பற்றி விளக்கிக்கொண்டு இருக்கிறார்.*

**स कदाचित् करुणया त्यक्त्वा मौनं ततः प्रयान्।**
**सन्त्रातुं भवतापार्तान् चचार भुवि शङ्करः ॥ ४ ॥**

सः एकदा करुणया मौनं त्यक्त्वा ततः प्रयान् भवतापार्तान् सन्त्रातुं शङ्करः (भूत्वा) भुवि चचार। (भवस्य तापः, तेन आर्तः, तान्। शंकरोति इति शङ्करः।

*அவர் ஒருசமயம் கருணையால் பேசாமையைக் கைவிட்டு அங்கிருந்து கிளம்பியவராகப் பிறப்பெனும் பிணியால் நொந்தவர்களை நன்கு காப்பாற்ற சங்கராசார்யர் வடிவில் பூமியில் சுற்றி வந்தார்.*

**नुमस्तमुत्तमश्लोकं शङ्करं लोकशंकरम्।**
**शृणुमोऽवहितास्तस्य चरितं परमाद्भुतम्॥ ५ ॥**

उत्तमश्लोकं लोकशङ्करं तं शङ्करं नुमः। तस्य परमाद्भुतं चरितं अवहिताः शृणुमः। (उत्तमः श्लोकः यस्य तं। पुण्या कीर्तिः यस्य, तं। लोकस्य शं करोति इति, तं। परमं च तत् अद्भुतं च।

*அந்த பெருமைமிக்க புகழ்பெற்றவரும் உலகிற்கு நன்மை புரிகிறவருமான சங்கராசாரியரை துதிப்போம். அவரது மிகவும் வியக்கத்தக்க வரலாற்றைக் கருத்துடன் கேட்போம்.*

**कलिना बलिना व्याप्ते विप्लुते धार्मिके पथि।**
**रुचिरे कापथे वेदविहिताचार संप्लवे॥ ६ ॥**
**देवेडितः करुणया शम्भुः सगुहपद्मजः।**
**सहरी रोचयामास जनिं शंकरणेच्छया॥ ७॥**

धार्मिके पथि बलिना कलिना व्याप्ते, विप्लुते (च सति), कापथे रुचिरे, वेदविहिताचार संप्लवे (सति) देवेडितः शंभुः करुणया सगुह पद्मजः, सहरिः, शङ्करणेच्छया जनिं रोचयामास। (कुत्सितः पन्थाः कापथं, तस्मिन्। वेदेन विहितः आचारः, तस्य संप्लवः, तस्मिन्। देवैः ईडितः। गुहेन पद्मजेन च सहितः (गुहः पद्मजश्च ताभ्यां सहितः। हरिणा सहितः। शङ्करणाय इच्छा, तया।)

*தர்மத்தை ஒட்டிய வழி வலிவுள்ள கலியால் ஊடுறுவப்பட்டு அழிந்தபோது, வேதம் கூறிய நன்னெறி மறைந்த போது, தீயவழி (மக்களுக்கு) மிகவும் விரும்பத் தக்கதானபோது, தேவர்களால் வேண்டப்பெற்ற சிவபெருமாள் (மக்களுக்கு) நன்மைபுரியும் எண்ணத்தால் முருகன் - பிரும்மாவுடனும் விஷ்ணுவுடனும் அவதாரம் எடுப்பதை விரும்பினார்.*

**केरलेषु नदी ख्याता पूर्णा यत्तीरयोर्द्वयोः।**
**हरेर्हरस्य सद्मानि दिव्यान्याभान्ति सर्वतः॥ ८॥**

द्वयोः यत्तीरयोः दिव्यानि हरेः हरस्य (च) सद्मानि सर्वतः आभान्ति, सा पूर्णा (नाम) नदी केरलेषु ख्याता। (यस्याः तीरे, तयोः।)

*எதன் கரையில் தெய்விகப் பெருமை மிக்க விஷ்ணுவுடையதும் சிவனுடையதுமான கோயில்கள் எங்கும் விளங்குகின்றனவோ. அந்த பூர்ணா (என்ற) நதி கேரளத்தில் புகழ் பெற்றது.*

**ऋद्धिमानुत्तरे तस्यास्तीरे विप्रगणाश्रयः।**
**कालटीति महान् ग्रामः फलभारनतद्रुमः॥ ९॥**

तस्याः उत्तरे तीरे, विप्रगणाश्रयः ऋद्धिमान्, फलभारनतद्रुमः कालटी इति महान् ग्रामः (अस्ति)। (ऋद्धिः अस्य अस्तीति सः। विप्राणां गणः, तस्य आश्रयः। फलानां भारः, तेन नताः द्रुमाः यस्मिन् सः।)

*அந்த நதியின் வடக்குக்கரையில் அந்தணர் கூட்டம் குடி இருப்பதும் செழிப்புள்ளதும் பழங்களின் சுமையால் தழைந்த மரங்கள் உள்ளதுமான காலடி என்ற பெரும் கிராமம் (உள்ளது).*

**तमावसच्छिवगुरुः भार्ययाऽऽर्याम्बया सह।**
**निर्यात्याध्ययनैर्यज्ञैः ऋणद्वितयमादरात्॥ १०॥**

शिवगुरुः आर्याम्बया भार्यया सह अध्ययनैः यज्ञैः (च) आदरात् ऋणद्वितयं निर्यात्य तं आवसत्। (ऋणयोः द्वितयं, तत्।)

*சிவகுரு (என்ற அந்தணர்,) ஆர்யாம்பா என்ற மனைவியுடன் வேதம் ஓதுதலாலும் யாகங்களாலும் இருகடன்களைக் கருத்துடன் திருப்பிக்கொடுத்து அந்த கிராமத்தில் வசித்தார். (அந்தணனுக்கு பிறந்ததும் மூன்று கடன்கள் ஏற்படுகின்றன. ருஷிக்கடன், தேவக்கடன். பித்ருக்கடன் என. வேதம் ஓதுவதால் ருஷிக்கடன் நீங்குகிறது. யாகங்கள் புரிவதால் தேவக்கடனும், நல்ல பிள்ளை பெறுவதால் பித்ருக்கடனும் நீங்குகின்றன. அவற்றில் ருஷிக்கடனையும் தேவக்கடனையும் சிவகுரு தீர்த்துவிட்டார்.)*

**यातप्राये वयोमध्ये दृष्ट्वात्मानमपुत्रकम्।**
**पितॄणामनृणो नाद्यापीति खेदमवाप सः॥ ११॥**

सः वयोमध्ये यातप्राये आत्मानं अपुत्रकं दृष्ट्वा अद्य अपि पितॄणां अनृणः न, इति खेदं अवाप। (वयसो मध्यं तस्मिन्। प्रायो यातं, तस्मिन्। न पुत्रको यस्य तम्। न ऋणं यस्य सः।

*அவர் (தன்) நடுவயது அனேகமாகக் கழிந்தபோது தான் பிள்ளை இல்லாதிருப்பவனாக உணர்ந்து இந்த வயதிலும் முன்னோர்களது கடன் தீர்த்தவனாக இல்லையே என்று மனவேதனையை அடைந்தார். (பித்ருக்கள் - தனக்கு முன்னோரான தந்தை பாட்டனார் முப்பாட்டனார் ஆகியோர்.)*

**भक्तवत्सलमीशानं भजावापत्यलब्धये।**
**इति पत्न्या प्रेरितस्स वृषाचलमुपागमत्॥ १२॥**

''भक्तवत्सलं ईशानं अपत्यलब्धये भजाव'' इति पत्न्या प्रेरितः सः वृषाचलं (नाम क्षेत्रं) उपागमत्। (भक्तेषु वत्सलः तं। अपत्यस्य लब्धिः, तस्यै। वृषः एव अचलः (अचलीभूतः) यस्मिन् तत्।)

*பக்தர்களிடத்தில் பரிவுள்ள பரமேச்வரனை குழந்தைப் பேற்றிற்காக பிரார்த்திப்போம் என்று மனைவியால் தூண்டப்பெற்ற அவர் விருஷாசலத்தை அடைந்தார்.*

**भजनं तावचरतां तत्र भक्त्या समेधितौ।**
**वृषाचलेशस्तावाह प्रसन्नस्तपसा तयोः ॥ १३ ॥**

तत्र भक्त्या समेधितौ तौ भजनं अचरताम्। तयोः तपसा प्रसन्नः वृषाचलेशः तौ आह। (वृषाचलस्य ईशः।)

*அவ்விருவரும் பக்தி நிரம்பியவர்களாக பஜன விரதத்தை அனுஷ்டித்தார்கள். அவர்களது தவத்தால் மகிழ்ந்த விருஷாசலநாதன் இவர்களைப் பார்த்துக் கூறினார்.*

**युवां वरयतं पुत्रान् बहून् मूढांश्चिरायुषः।**
**सर्वज्ञमेकमथवा दिव्यमल्पायुषं सुतम्॥ १४ ॥**

युवां मूढान् चिरायुषः बहून् पुत्रान् अथवा दिव्यं सर्वज्ञं अल्पायुषं एकं वरयतम्। (चिरं आयुः येषां ते, तान्। सर्वं जानाति इति, तं। अल्पं आयुः यस्य, तं।)

*''நீங்கள் இருவரும் மூடர்களும் நீண்ட ஆயுள் உள்ளவர்களுமான பல பிள்ளைகளையோ தெய்வீக சக்தியுள்ளவனும் எல்லாம் அறிந்தவனுமான அல்பாயுளுள்ள ஒரு பிள்ளையையோ தேர்ந்து எடுங்கள்'' (என்று).*

**पुत्रोऽस्तु नौ स सर्वज्ञः इत्यूचाते कृताञ्जली।**
**सर्वज्ञस्तनयो भूयात् गृहान् यातं मुदान्वितौ॥ १५ ॥**

**इत्थं शिवां शिवगिरं श्रुत्वा तौ मुदितान्तरौ।**
**अयातां स्वगृहं शम्भौ समर्पितनिजेहितौ॥ १६ ॥**

"सः नौ पुत्रः सर्वज्ञः अस्तु" इति तौ कृताञ्जली ऊचाते। "तनयः सर्वज्ञः भूयात्। मुदा अन्वितौ गृहान् यातम्।" इत्थं शिवां शिवगिरं श्रुत्वा तौ मुदितान्तरौ, शंभौ समर्पित निजेहितौ स्वगृहं अयाताम्। (कृतः अञ्जलिः याभ्यां, तौ। शिवा गीः ताम्। मुदितं आन्तरं ययोः, तौ। स्वस्य (स्वयोः) गृहम्। समर्पितं निजं ईहितं याभ्यां तौ, तं।

*"எங்களுக்கு எல்லாமறிந்தவனாக அந்தப்பிள்ளை இருக்கட்டும்" எனக் கைகூப்பியவர்களாகச் சொன்னார்கள். "எல்லாமறிந்த பிள்ளை உண்டாகட்டும். மகிழ்ச்சியடைந்த-வர்களாக வீட்டை நோக்கிச் செல்லுங்கள்" என்று மங்களமான பரமேச்வரனின் பேச்சைக்கேட்டு மனம் மகிழ்ந்தவர்களாக சிவபெருமானிடத்தில் தங்களது விருப்பத்தை ஒப்படைத்-தவர்களாக வீட்டை நோக்கிச் சென்றார்கள்.*

**सा दधार सती गर्भं काले शिवमहोयुतम्।**
**ववृधे शनकैस्तस्याः गर्भो रविरिवोन्मिषन्॥ १७॥**

सती सा काले शिवमहोयुतं गर्भं दधार। तस्याः गर्भः, उन्मिषन् रविः इव शनकैः ववृधे। (शिवस्य महः, तेन युतः, तं।)

*அவள் உரிய காலத்தில் சிவனது ஒளியுடன் கூடிய கருவைத்தாங்கினாள். உதிக்கும் சூரியன்போல் அந்தக்கரு சிறிதுசிறிதாக வளர்ந்தது.*

**षड्विंशे शतके प्राप्ते यौधिष्ठिरशकस्य च।**
**एकत्रिंशे नन्दनाब्दे नन्ये मेषङ्गते रवौ॥ १८॥**

**वैशाखशुक्लपञ्चम्यां कर्कटे भे पुनर्वसौ।**
**मध्याह्नेऽभिजिति श्रीमन्मुहूर्ते सर्वमङ्गले॥ १९॥**

**सा प्रासूत शुभे काले सुतमिन्द्रमिवादितिः।**
**सुलक्षणं विशालाक्षं पित्रोरानन्ददायिनम्॥ २०॥**

यौधिष्ठिर शकस्य षड्विंशे शतके प्राप्ते, (च) एकत्रिंशे नन्द्ये नन्दनाब्दे, रवौ मेषं गते, वैशाखशुक्लपञ्चम्यां कर्कटे, पुनर्वसौ भे, अभिजिति, मध्याह्ने सर्व मङ्गले श्रीमन्मुहूर्ते शुभे काले अदितिः इन्द्रं इव, आनन्ददायिनं सुतं प्रासूत। (युधिष्ठिरस्य अयं, सः शकः, तस्मिन्। वैशाखस्य शुक्ला पञ्चमी तस्यां। श्रीरस्यास्तीति श्रीमान्, श्रीमान् मुहूर्तः तस्मिन्। सर्वेषां मङ्गलं, तस्मिन्। शोभनानि लक्षणानि यस्य तं। विशाले अक्षिणी यस्य तं। आनन्दं ददाति इति तं।)

*யுதிஷ்டிரசகத்தின் 26வது நூற்றுண்டு நடைபெறும்போது. அதன் முப்பத்தோருவது ஆண்டான புகழ்பெற்ற நந்தன ஆண்டில் சூரியன் மேஷத்தில் ஸஞ்சரிக்கும்போது வைசாக சுக்லபக்ஷத்துப் பஞ்சமியில் கர்கடலக்கினத்தில் புனர்வஸு நக்ஷத்திரத்தில் நடுப்பகலில் அபிஜித் எனும் வேளையில் எல்லோருக்கும் மங்களம் தரும் பெருமைமிக்க முகூர்த்தத்தில் நல்ல வேளையில் அதிதி இந்திரனைப் (பிள்ளையாகப் பெற்றதைப்) போல் அவள் நல்ல லக்ஷணங்கள் உள்ளவனும் விசாலமான கண்கள் உள்ளவனும் பெற்றோருக்கு மகிழ்ச்சி தருபவனுமான பிள்ளையைப் பெற்றுள்.*

*(யுதிஷ்டிரசகம் கலிக்குமுன் 37 ஆண்டுகளுக்குமுன் நடந்த தர்ம புத்திரரின் பட்டாபிஷேகத்தைக் கொண்டாட அமைந்த காலவரை. கிருஸ்துவிற்கு 3102 ஆண்டுக்குக்கு முன் கலியுகம் தொடங்கியது. யுதிஷ்டிரசகம் தொடங்கி 2631 ம் ஆண்டில், கலியுகம் தொடங்கி 2593ம் ஆண்டில், கிருஸ்துவிற்குமுன் 509 ஆண்டில் ஸ்ரீ சங்கரபவத் பாதர் தோன்றினுர் என்று ஸம்பிரதாயம் அறிந்தவர்களின் காலக்கணக்கு).*

**जातं तं तनयं जातकर्मणा पूतमातनोत्।**
**पिता शिवगुरुस्तस्य नाम शङ्कर इत्यधात्॥ २१॥**

पिता शिवगुरुः तं तनयं जातकर्मणा पूतं आतनोत्। तस्य नाम शङ्करः इति अधात्। (जातस्य कर्म।)

*தந்தையான சிவகுரு பிறந்துள்ள அந்த குமாரனை ஜாதகர்மா என்ற சடங்கால் தூய்மை பெற்றவனாகச் செய்தார். அவனுக்குச் சங்கரன் என்று பெயரிட்டார். ஜாதகர்ம — குழந்தை பிறந்ததும் தந்தை அதன் மேன்மைக்காகச் செய்ய வேண்டியசடங்கு.*

**चन्द्रेण मूर्ध्नि नेत्रेण भाले शूलेन चासंयोः।**
**चिह्नितं स्फटिकाभं तं गिरिशं मेनिरे जनाः ॥ २२ ॥**

मूर्ध्नि चन्द्रेण, भाले नेत्रेण, अंसयोः शूलेन च चिह्नितं स्फटिकाभं तं जनाः गिरिशं मेनिरे। (स्फटिकस्येव आभा यस्य तम्। गिरि शेते इति, तं।)

*தலையில் சந்திரனாலும், நெற்றியில் கண்ணாலும், தோள்களில் திரிசூலத்தாலும் அடையாளமிடப்பட்டவரும் ஸ்படிகம் போன்ற காந்தி உடையவருமான அவரை மக்கள் சிவபெருமானாக மதித்தனர்.*

**अर्भको ववृधे पित्रोर्मोदेन शरदिन्दुवत्।**
**रिङ्गन् ज्ञुभ्यां चरन् पद्भ्यां कलं सुमधुरं वदन्॥ २३**

अर्भकः, ज्ञुभ्यां रिङ्गन्, पद्भ्यां चरन्, कलं सुमधुरं वदन्, (सन्) पित्रोः मोदेन (सह) शरदिन्दुवत् ववृधे। (शरदः इन्दुः, तद्वत्। ज्ञुः जानुः *முழங்கால்*)

*சிசு முழங்கால்களால் தவழ்ந்துகொண்டும், கால்களால் நடந்து கொண்டும். இனிய மழலையுடன் பேசிக்கொண்டும் சரத்காலத்துச்சந்திரனைப்போல் பெற்றோரின் மகிழ்ச்சியுடன் வளர்ந்தது. (சிசுவின் அழகிய நடை முதலிய விளையாட்டைக் கண்டு பெற்றோரின் மகிழ்ச்சியும் சிசுவும், சரத்காலத்தின் சந்திரனைப்போல். வளர்ந்து கொண்டே இருந்தன).*

**भाषामवेत् ततो वर्णान् पपाठ च लिलेख च।**
**चूडां चकारास्य पिता तृतीयेऽब्दे यथाविधि॥ २४ ॥**

(शङ्करः) भाषां अवेत्। ततः वर्णान् पपाठ, लिलेख च। पिता तृतीये अब्दे यथाविधि अस्य चूडां चकार। (विधिं अनतिक्रम्य यथाविधि।)

*(சிசுவான சங்கரர்) மொழியை அறிந்துகொண்டார். அதன் பிறகு எழுத்தைக் கற்றுக்கொண்டார். எழுதினார். இவரது தந்தை மூன்றாவது வயதில் முறைப்படி இவருக்குச் சௌளம் செய்தார்.*

**देवीं भेजे सतनयो नित्यं ग्रामान्तसंस्थिताम्।**
**शङ्कराय ददौ शिष्टं क्षीराद्देव्यै निवेदितात्॥ २५ ॥**

(शिवगुरुः) सतनयः, नित्यं ग्रामान्तसंस्थितां देवीं भेजे। देव्यै निवेदितात् क्षीरात् शिष्टं शङ्कराय ददौ। (ग्रामस्य अन्ते संस्थिता तां)

*(சிவகுரு) குமாரனுடன் தினமும் கிராமத்தின் எல்லையில் கோயில் கொண்டுள்ள பார்வதியை வழிபட்டு வந்தார். தேவிக்கு நிவேதனமாக அளிக்கப்பட்ட பாலில் மீந்ததை சங்கரருக்கு அளித்து வந்தார். (காலடிக்குப் பக்கத்திலுள்ள மாணிக்கமங்கலத்தில் உள்ள காத்யாயனிதான் இந்த பார்வதிதேவி என்று சொல்கின்றனர்.)*

**कदाचिज्जनके याते क्वचिन्मात्रा प्रचोदितः।**
**देवीमाराधयद्बालः स्वयं क्षीरं निवेदयन्॥ २६ ॥**

कदाचित् जनके क्वचित् याते, मात्रा प्रचोदितः बालः क्षीरं निवेदयन् देवीं आराधयत्।

*ஒருநாள் தந்தையான சிவகுரு எங்கோ (வெளியூர்) சென்று இருந்தபோது தாயான ஆர்யாம்பையினால் அனுப்பப்பட்ட சிறுவர் சங்கரர், தானே பாலை நிவேதனம் செய்பவராக தேவியை வழிபட்டார்.*

**पिबेति प्रार्थयामास सा नागृह्णात्ततः पयः।**
**रुरोद बालको देवी सन्निधायापिबत्पयः॥ २७॥**

(सः) 'पिब'! इति प्रार्थयामास। सा ततः पयः न अगृह्णात्। बालः रुरोद। देवी सन्निधाय पयः अपिबत्।

*(சங்கரர் பாலைக்) குடி என்று வேண்டினார். அந்ததேவி சங்கரரிடமிருந்து பாலை ஏற்றுக்கொள்ளவில்லை. பாலனான சங்கரர் (அதனைக்கண்டு) அழத்தொடங்கினார். தேவி தோன்றிப் பாலைக் குடித்தாள்.*

**देव्या सर्वं पयः पीतं दृष्ट्वा किं वा न शेषितम्।**
**मह्यं देहि पयः शिष्टं इत्यरोदीत्स बालकः॥ २८॥**

देव्या सर्वं पयः पीतं दृष्ट्वा, "शेषितं न किं वा?" "मह्यं शिष्टं पयः देहि" इति सः बालकः अरोदीत्।

*அந்தச் சிறுவனான சங்கரர் தேவியால் எல்லா பாலும் குடிக்கப்பட்டதைக் கண்டு ஏன் பால் (எனக்குத் தருவதற்காக) மீதப்படுத்தவில்லை? எனக்கு மீதமாக உள்ள பாலைத் தா என்று அழுதார்.*

**सा लालयन्ती तं बालमङ्कमारोप्य वत्सला।**
**अपाययत्पयः स्तन्यं बालस्तेनाभवत्कविः॥ २९॥**

वत्सला सा, तं बालं अङ्कं आरोप्य लालयन्ती, स्तन्यं पयः अपाययत्। तेन बालः कविः अभवत्।

*குழந்தையிடம் அன்பு மிகுந்த அந்த தேவி அந்தக் குழந்தையை மடியில் ஏற்றிக் கொஞ்சுபவளாக (தன்) முலைப்பாலை ஊட்டிவிட்டாள். அந்த பாலன் அதனால் கவி ஆனார்.*

**ततः शिवगुरुर्बालं पञ्चमेऽब्दे सुमेधसम्।**
**ब्रह्म संग्राहयामास ह्युपनीय यथाविधि॥ ३०॥**

ततः शिवगुरुः, पञ्चमे अब्दे, सुमेधसं बालं यथाविधि उपनीय, ब्रह्म सङ्ग्राहयामास। (शोभना मेधा यस्य तम्।)

*அதன் பிறகு சிவகுரு ஐந்தாவது வயதில் நல்ல அறிவாளியான சிறுவனை முறைப்படி உபநயனத்தால் தூய்மைப் படுத்தி காயத்திரி மந்திரத்தை ஏற்கச்செய்தார்.*

**अथैकदा शिवगुरुः समाधाय मनः शिवे।**
**दैवदिष्टं पदं भेजे निर्वृत्तनिखिलक्रियः॥ ३१॥**

अथ एकदा शिवगुरुः शिवे मनः समाधाय निर्वृत्तनिखिलक्रियः दैवदिष्टं पदं भेजे। (निर्वृत्ता निखिला क्रिया येन सः। दैवेन दिष्टं, तत्)

*அதன் பிறகு ஒருநாள் சிவகுரு சிவபெருமானிடம் மனத்தைப் பதித்து எல்லாக்கடமைகளும் தீர்ந்தவராக விதி தந்த மரணத்தை அடைந்தார்.*

**गते पितरि खिद्यन्त्या मात्रा नीतो गुरोः कुलम्।**
**अध्यैष्ट निगमान् सर्वान् आगादस्याष्टमं वयः॥ ३२॥**

पितरि गते, मात्रा गुरोः कुलं नीतः, सर्वान् निगमान् अध्यैष्ट। अस्य अष्टमं वयः आगात्।

*தந்தை மறைந்ததும் மனவேதனைப்பட்ட தாயாரால் குருவின் இருப்பிடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டவராக எல்லா வேதங்களையும் கற்றார். அவருக்கு எட்டாவது வயது வந்தது.*

**भिक्षां ग्रहीतुं सवयोगणेनागात्कदाचन।**
**दरिद्रविप्रसदनं भिक्षां देहीत्ययाचत॥ ३३॥**

कदाचित् सवयोगणेन (सह) भिक्षां ग्रहीतुं दरिद्रविप्रसदनं अगात्। ''भिक्षां देहि'' इति अयाचत (समानं वयः येषां ते सवयसः, तेषां गणः, तेन। दरिद्रो विप्रः, तस्य सदनं, तत्।)

*ஒருசமயம் தன்வயதுக்கொத்த நண்பர் கூட்டத்துடன் பிட்சை ஏற்பதற்காக ஏழை அந்தணனின் வீட்டை அடைந்தார்.*

**कल्याणी द्विजपत्नी सा वटुं वीक्ष्याद्भुताकृतिम्।**
**अदृष्ट्वा वटवे दातुमन्विच्छन्त्यपि किञ्चन॥ ३४॥**
**एकं धात्रीफलं दीना ददौ तस्मा अवाङ्मुखी।**

कल्याणी विप्रपत्नी सा, अद्भुताकृतिं वटुं वीक्ष्य अन्विच्छन्ती अपि वटवे दातुं किञ्चित् अपश्यन्ती, अवाङ्मुखी दीना एकं धात्रीफलं तस्मै ददौ। (द्विजस्य पत्नी। अद्भुता आकृतिः यस्य, तं। धात्र्याः फलं, तत्। अवाक् मुखं यस्याः सा)

*அந்த மங்களம் நிரம்பிய அந்தணர் மனைவி விந்தைக்குரிய வடிவுள்ள பிரும்மசாரியைக் கண்டு, பிரும்மசாரிக்குக் கொடுக்கத் தேடியும் எதனையும் காணாதவளாக வேதனை யுற்றவளாகத் தலை குனிந்தவளாக ஒரு நெல்லிக்கனியைத் தந்தாள்.*

**तां दृष्ट्वाऽकिञ्चनां दीनां स निष्किञ्चनवत्सलः ॥ ३५ ॥**
**उपतस्थे रमां देवीं नारायणकुटुंबिनीम्।**
**ततः प्रसन्नां कमलां ययाचे दययाऽऽर्द्रधीः ॥ ३६ ॥**

निष्किञ्चनवत्सलः, सः अकिञ्चनां दीनां तां दृष्ट्वा, नारायणकुटुंबिनीं रमां देवीं उपतस्थे। ततः प्रसन्नां कमलां दयया आर्द्रधीः ययाचे। (न किञ्चन यस्यां सा, तां। न किञ्चन येषु ते निष्किञ्चनाः तेषु वत्सलः। कुटुम्बं अस्याः अस्तीति कुटुम्बिनी। नारायणस्य कुटुंबिनी। आर्द्रा धीः यस्य सः।

*ஒன்றுமில்லாத ஏழைகளிடம் அன்புள்ள அந்த சங்கரர் வேதனையுற்றவளும் கொடுக்க ஒன்றுமில்லாதவளுமான அவளைக்கண்டு. நாராயணனின் இல்லாளும் எல்லாம் வல்லவளுமான லக்ஷ்மியை வழிபட்டார். அதனால் தயையால் ஈரநெஞ்சமுள்ளவராக அருள் வடிவம்கொண்ட லக்ஷ்மியை வேண்டினார்.*

**विप्रपत्न्याऽऽत्मसर्वस्वं दत्तं मह्यमिदं फलम्।**
**यद्यहं दयनीयोऽस्यै दद्या देवार्हसंपदः ॥ ३७ ॥**

"विप्रपत्न्या आत्मसर्वस्वं, इदं फलं दत्तम्। यदि अहं दयनीयः, देवार्हसंपदः अस्यै दद्याः। (विप्रस्य पत्नी, तया। आत्मनः सर्वं स्वं। देवानां अर्हाः संपदः, ताः।)

*அந்தணன் மனைவியால் தனது முழு உடமையாகிய இந்தக்கனி எனக்குத் தரப்பட்டது. நான் உனது கருணைக்குரியவளாகில், இவளுக்குத் தேவர்களுக்குகந்த செல்வங்களை அளிப்பாய்.*

**स्तुत्या प्रीता विदित्वाऽस्य हृद्गतं कृपया रमा।**
**कनकामलकैर्वृष्टैः गेहमापूरयत्तदा॥ ३८॥**

स्तुत्या प्रीता रमा, अस्य हृद्गतं विदित्वा, कृपया तदा वृष्टैः कनकामलकैः गेहं आपूरयत्। (हृदि गतम्। कनकमयानि आमलकानि, तैः।

*துதியால் மகிழ்ந்த லக்ஷ்மீதேவி சங்கரது கருத்தை உணர்ந்து அப்போது பொழிந்த தங்க நெல்லிக்கனிகளால் வீட்டை நிரப்பினாள்.*

**अष्टमे हायने सर्वविद्यापारङ्गतो वटुः।**
**निवृत्तोऽभूद्गुरुकुलान्मातृशुश्रूषणे रतः॥ ३९॥**

अष्टमे हायने सर्वविद्यापारङ्गतः वटुः, गुरुकुलात् निवृत्तः, मातृशुश्रूषणे रतः अभूत्। (सर्वाः विद्याः तासां पारं गतः। गुरोः कुलं, तस्मात्। मातुः शुश्रूषणं, तस्मिन्।)

*எட்டாவது வயதில் எல்லா கல்வித் துறைகளின் எல்லையை அடைந்த (அந்த) பிரும்மசாரியான சங்கரர் குருவின் வீட்டிலிருந்து திரும்பியவராகத் தாயின் பணிவிடையில் ஈடுபட்டவராக இருந்தார்.*

**नदीं विदूरगां गन्तुमक्षमां जरया प्रसूम्।**
**दृष्ट्वाऽऽनिन्ये नदीं पूर्णां तूर्णं निजगृहान्तिकम्॥ ४०॥**

विदूरगां नदीं जरया गन्तुं अक्षमां प्रसूं दृष्ट्वा, पूर्णां नदीं तूर्णं निजगृहान्तिकं आनिन्ये। (विदूरे गच्छति, तां। न क्षमा तां। निजं गृहं, तस्य अन्तिकं।)

அவர் வெகுதூரத்தில் சென்றுகொண்டிருந்த பூர்ணாநதி நோக்கி முதுமையால் செல்ல முடியாதிருந்த தாயைக்கண்டு பூர்ணாநதியை உடனேயே தனது வீட்டின் அருகாமையை அடையச்செய்தார்.

**एकदा शङ्करं नद्यामवतीर्णं यदृच्छया।**
**तत्रागतोऽग्रहीन्नक्रो बालश्चुक्रोश मातरम्॥ ४१॥**

एकदा, नद्यां अवतीर्णं शङ्करं, यदृच्छया तत्र आगतः नक्रः अग्रहीत्। बालः मातरं (प्रति) चुक्रोश।

ஒருசமயம் ஆற்றில் இறங்கிய சங்கரரைத் திடீரென அங்கு வந்த முதலை கவ்விற்று. பாலஞன சங்கரர் தாயைக் கூவிக் கூப்பிட்டார்.

**अंब! नक्रगृहीतोऽहमायुषोऽन्तः समागतः।**
**गृह्णीयामाश्रमं तुर्यं जन्मान्तरमिदं मतम्॥ ४२॥**

"अंब! अहं नक्रगृहीतः। आयुषः अन्तः समागतः। तुर्यं आश्रमं गृह्णीयाम्। इदं जन्मान्तरं मतम्॥" (नक्रेण गृहीतः। अन्यत् जन्म-जन्मान्तरं।)

தாயே! நான் முதலையால் கவ்வப்பட்டுள்ளேன். வாழ்வின் முடிவு நெருங்கிவிட்டது. நான்காவது ஆசிரமத்தை ஏற்பேன். இது வேறு பிறவி எனக்கொள்ளப்பட்டுள்ளது.

**नक्रान्मुक्तोऽथ जीवेयं यतिर्यायां पराङ्गतिम्।**
**इत्युक्त्वा सा क्षणं दध्यौ कृत्ये दोलायितान्तरा॥ ४३॥**

"अथ नक्रात् मुक्तः जीवेयं (यदि) यतिः परां गतिं यायाम्।" इति उक्त्वा सा कृत्ये दोलायितान्तरा क्षणं दध्यौ। (दोलायितं अन्तरं यस्याः सा)

*முதலையிலிருந்து விடுபட்டவனானால் உயிர் பிழைப்பேன். அல்லது (விடுபடாவிடில்) சன்யாசியாகி உத்தமகதியை அடைவேன். இவ்வாறு கூறப்பட்ட ஆர்யாம்பாள் சிறிது நேரம் யோசித்தாள்.*

**मृत्युग्रहात्सुतं त्रातुं नान्यं मार्गमविन्दत।**
**सन्न्यासग्रहणे पुत्रमनुमेने हितैषिणी॥ ४४॥**

सा मृत्यु ग्रहात् सुतं त्रातुं अन्यं मार्गं न अविन्दत। हितैषिणी पुत्रं सन्न्यासग्रहणे अनुमेने। (मृत्योः ग्रहः, तस्मात्। सन्न्यासस्य ग्रहणम्, तस्मिन्। हितं इच्छन्ती।

*சாவின் பிடியிலிருந்து பிள்ளையைக் காப்பாற்றுவதற்கு அவள் வேறு வழியைக் காணவில்லை. இதத்தைச் செய்ய முனைந்தவளாகப் பிள்ளையை ஸன்யாஸம் ஏற்க அனுமதித்தாள்.*

**सन्न्यस्तोऽहमिति क्रोशन् बालो नक्रादमुच्यत।**
**तीरं प्राप्य प्रहृष्टात्मा ननामांबापदाब्जयोः॥ ४५॥**

"अहं सन्न्यस्तः" इति क्रोशन् बालः नक्रात् अमुच्यत। प्रहृष्टात्मा तीरं प्राप्य अम्बापदाब्जयोः ननाम। (प्रहृष्टः आत्मा यस्य, सः। पदे अब्जे इव। अंबायाः पदाब्जे, तयोः)

*நான் ஸன்யாஸியாகிவிட்டேன் என உரக்கச் சொல்லுகின்ற சங்கரர் முதலையிலிருந்து விடுபட்டார். கரையை அடைந்து மகிழ்ந்து தாயின் திருவடித்தாமரைகளில் வணங்கினார்.*

**इत एव प्रव्रजिष्ये जनन्यनुमतस्त्वया।**
**शाधि मामुत्तरे कृत्ये रक्षेयुस्त्वां सुहृज्जनाः॥ ४६॥**

"जननि! त्वया अनुमतः इतः एव प्रव्रजिष्ये। उत्तरे कृत्ये मां शाधि। सुहृज्जनाः त्वां रक्षेयुः॥ (शोभनं हृद् येषां ते, सुहृदो जनाः)

*அம்மா! உங்களால் அனுமதிக்கப்பட்டவனாக நான் இங்கிருந்தே (இப்பொழுதே) துறவியாக வெளிச்செல்வேன். மேற்கொண்டு செய்யவேண்டிய விஷயத்தில் உத்தரவிடுங்கள். (உங்களிடம்) அக்கறையுள்ளவர்கள் உங்களைக் காப்பாற்றுவார்கள்.*

**इति प्रार्थयमानं तं कृच्छ्राल्लब्धधृतिः प्रसूः ।**
**प्राह मद्देहपाते त्वं विदध्याः संस्कृतिं स्वयम् ॥ ४७ ॥**

कृच्छ्रात् लब्धधृतिः प्रसूः, इति प्रार्थयमानं तं, प्राह ''मद्देहपाते त्वं स्वयं संस्कृतिं विदध्याः।'' (लब्धा धृतिः यया सा। मम देहः, तस्य पातः, तस्मिन्)

*மிகச்சிரமப்பட்டுத் தைரியமடைந்த அந்தத்தாய் அனுமதி கோரிநிற்கின்ற அவரைக் கேட்டுக் கொண்டாள். ''என்னுடைய உடல் விழுந்ததும் நீயே ஈமச்சடங்குகளைச் செய்வாய்''*

**देहान्ते स्मर मां मातः समेष्यामि त्वदन्तिकम् ।**
**विधिवत्करणीयं च करिष्ये वचनात्तव ॥ ४८ ॥**

''मातः देहान्ते मां स्मर। त्वदन्तिकं समेष्यामि। तव वचनात् करणीयं च विधिवत् करिष्ये।'' (देहस्य अन्तः, तस्मिन्। तव अन्तिकं।)

*தாயே ! உடலின் இறுதிநிலையில் என்னை நினையுங்கள். நான் தங்கள் சமீபம் வருவேன். முறைப்படி செய்ய வேண்டியதை உங்கள் சொற்படி செய்வேன்.*

**इत्युक्त्वा मातरं नत्वा प्रतस्थे दिशमुत्तराम् ।**
**पूर्णातीरालयगतः कृष्णः प्रस्थितमाह तम् ॥ ४९ ॥**

इति मातरं उक्त्वा, नत्वा, उत्तरां दिशं(प्रति) प्रतस्थे। प्रस्थितं तं, पूर्णातीरालयगतः कृष्णः आह। (पूर्णायाः तीरे आलयः, आलयं गतः।)

*இவ்வாறு கூறித் தாயைக் வணங்கி வடக்கு திசை நோக்கிக்கிளம்பினார். கிளம்பிய அவரை பூர்ணைநதிக்கரையில் கோயில்கொண்டுள்ள ஸ்ரீ கிருஷ்ணர் கூறினார்.*

**त्वया मातृहितायेयमानीता त्वद्गृहान्तिकम् ।**
**मद्धामोर्मिकरैस्तीव्रं ताडयत्यनिशं नदी ॥ ५० ॥**

''मातृहिताय त्वया त्वद्गृहान्तिकं आनीता इयं नदी मद्धाम ऊर्मिकरैः अनिशं तीव्रं ताडयति।'' (मातुः हितं तस्मै। तव गृहं, तस्य अन्तिकं, मम धाम। ऊर्मय एव कराः तैः।)

*உன்னால் உன் தாயின் நன்மையை முன்னிட்டு உன் வீட்டின் அருகில் கொணரப்பெற்ற இந்த ஆறு என் இருப்பிடத்தை அலைகளாகிய கைகளால் எப்போதும் கடுமையுடன் அடித்துக்கொண்டு இருக்கிறது.*

**सलिलैश्चाल्यमानं मत्सदनं पतनोन्मुखम्।**
**तस्माद्विधाय मद्धाम्ने रक्षां, याहि स्वसिद्धये॥ ५१॥**

''सलिलैः चाल्यमानं मत्सदनं पतनोन्मुखम्। तस्मात् मद्धाम्ने रक्षां विधाय, स्वसिद्धये याहि।'' (मम सदनं, पतनाय उन्मुखम्। मम धाम, तस्मै। स्वस्य सिद्धिः, तस्यै।)

*நீரின் தாக்குதலால் அசைக்கப்பட்டிருக்கின்ற என் இருப்பிடத்திற்குப் பாதுகாப்பு அளித்துவிட்டுத் தன் காரியத்தை நிறைவேற்றச் செல்வாயாக.*

**इतीरितस्तत्प्रतिमां अपनीयापगातटात्।**
**स्थिरे रम्ये प्रदेशे तं प्रत्यस्थापयदच्युतम्॥ ५२॥**

इति ईरितः तत्प्रतिमां आपगातटात् अपनीय स्थिरे रम्ये प्रदेशे तं अच्युतं प्रत्यस्थापयत्। (तस्य प्रतिमा। आपो गच्छन्ति अनया इति आपगा। तस्याः तटः तस्मात्।)

*இவ்வாறு கூறப்பட்டவராக அந்த கிருஷ்ணரது விக்ரஹத்தை ஆற்றங்கரையிலிருந்து அப்புறப்படுத்தி, ஸ்திரமான அழகிய இடத்தில் அவரைப் பிரதிஷ்டை செய்தார்.*

**तस्माज्जनन्याश्च ततो लब्ध्वानुज्ञां यतान्तरः।**
**प्रतस्थे पथि निर्द्वन्द्वं भावयन्ब्रह्म निर्गुणम्॥ ५३॥**

तस्मात् जनन्याः च अनुज्ञां लब्ध्वा, यतान्तरः, पथि निर्द्वन्द्वं निर्गुणं ब्रह्म भावयन् ततः प्रतस्थे। (यतं आन्तरं येन)

*அதன் பிறகு அந்த கிருஷ்ணாிடமிருந்தும் தாயிடமிருந்தும் அனுமதி பெற்று மனத்தை அடக்கியவராக வழியில் வேற்றுமைகள் அற்ற தூயதான பரம்பொருளை மனத்தில் தியானம் செய்துகொண்டே அவ்விடம் விட்டகன்றார்.*

**गुरोश्चरणसेवार्थी गुर्वन्वेषणतत्परः।**
**ग्रामान्पुराणि गहनान्यतीत्य प्राप नर्मदाम्॥ ४४॥**

गुरोः चरणसेवार्थी, गुर्वन्वेषणतत्परः, ग्रामान् पुराणि गहनानि अतीत्य नर्मदां प्राप। (चरणयो; सेवा, सैव अर्थः यस्य, सः तदेव परं यस्य तत्परः। गुरोः अन्वेषणे तत्परः।)

*(சங்கரர்) குருவின் திருவடிகளின் பணிவிடை செய்யும் நோக்கம் உள்ளவராக, குருவை நாடுவதில் முனைந்தவராக கிராமங்களையும் நகரங்களையும் காடுகளையும் தாண்டி நர்மதை ஆற்றை அடைந்தார்.*

**पुरा चिदंबरेशस्य प्रदोषनटनाद्भुतम्।**
**द्रष्टुमभ्यागतः कश्चित्पाणिनिर्नाम तापसः॥ ५५॥**

पुरा चिदंबरनटेशस्य प्रदोषनटनाद्भुतं द्रष्टुं पाणिनिः नाम कश्चित् तापसः, अभ्यागतः। (चिदम्बरे नटानां ईशः, प्रदोषे नटनं, तदेव अद्भुतं, तत्।)

*முன்னர் ஒருநாள் சிதம்பரத்து ஈசனாகிய நடராஜப் பெருமானின் நடனமெனும் விந்தையைக் காண்பதற்காக பாணினி என்றமுனிவர் வந்தார்.*

**स चक्रे नृत्यतस्यस्य ढक्कानादविजम्भितैः।**
**वर्णजालैः पदाभिख्यशास्त्रसूत्राणि बुद्धिमान्॥ ५६॥**

बुद्धिमान् सः, नृत्यतः तस्य ढक्कानादविजृंभितैः, वर्णजालैः पदाभिख्यशास्त्रसूत्राणि चक्रे। (ढक्कायाः नादः, तेन विजृंभितानि, तैः। वर्णानां जालनि तैः। पदं इति अभिख्या यस्य, तत् शास्त्रं, तस्य सूत्राणि)

*மிகச்சிறந்த அறிவாளியான அந்த பாணினி நர்த்தனம் செய்கின்ற அந்த நடராஜப் பெருமானின் உடுக்கின் ஒலியிலிருந்து வெளியான எழுத்துக் கூட்டங்களைக் கொண்டு பத சாஸ்திரம் என்ற இலக்கண நூலுக்கான ஸூத்திரங்களை எழுதினார்.*

**अथान्यस्तत्सहाध्यायी नाम्ना वररुचिर्मुनिः।**
**वार्तिकान्याह सूत्रार्थं विवरीतुं महामतिः॥ ५७॥**

अथ, तत्सहाध्यायी अन्यः, नाम्ना वररुचिः महामतिः मुनिः सूत्रार्थं विवरीतुं वार्तिकानि आह। (सह अधीते इति सहाध्यायो, तस्य सहाध्यायी सूत्राणां अर्थः तं। महती मतिः यस्य सः।

*மேலும் பாணினியுடன் இலக்கணம் கற்றவரான மற்றொரு முனிவர் பெரும் அறிவாளி வரருசி என்பவர், ஸூத்திரங்களின் பொருளை விளக்குவதற்காக வார்த்திகங்களைச் செய்தார். (சொன்னதையும் சொல்லாததையும் தவறானவைகளையும் பற்றித் தெளிவு படுத்துபவை வார்த்திகங்கள்).*

**विष्णोर्हि शयनं शम्भोर्नूपुरं च महीधरः।**
**शेषः पतञ्जलिरभूत् दिदृक्षुः स सभानटम्॥ ५८॥**

**भुवं गतः तपस्विन्या गोणीनाम्न्याः स सर्पराट्।**
**सुतार्थिन्याः सवित्रेऽर्घ्यमर्पयन्त्याः कराञ्जलेः॥ ५९॥**

**अपतत्सुन्दरवपुः बालकः सातिविस्मिता।**
**सन्तुष्टा सस्वजे बालं स बभूव पतञ्जलिः॥ ६०॥**

विष्णोः शयनं, शंभोः नूपुरं, महीधरश्च, शेषः पतञ्जलिः अभूत्। सभानटं दिदृक्षुः भुवं गतः स सर्पराट् सवित्रे अर्घ्यं अर्पयन्त्याः सुतार्थिन्याः गोणीनाम्न्याः कराञ्जलेः सुन्दरवपुः बालकः अपतत्। सा अतिविस्मिता सन्तुष्टा (सती) बालं सस्वजे। सः पतञ्जलिः बभूव। (महीं धरति इति। द्रष्टुं इच्छुः। सभायां नटति इति। गोणी इति नाम यस्याः सा, तस्याः। सर्पाणां राट्। सुतः(एव) अर्थः यस्याः सा। करयोः अञ्जलिः, तस्याः, सुन्दरं वपुर्यस्य, सः।)

*விஷ்ணுவின் படுக்கையும் சிவபெருமானின் காலணிரும் பூமியைத் தாங்குபவரும் ஸர்பங்களின் அரசனுமான ஆதிசேஷன் சபையில் ஆடும் நடராஜப் பெருமானை (கூத்தர் பெருமானை)ப் பார்க்க விரும்பியவராகப் பூமியை அடைந்து பிள்ளை வேண்டித் தவமியற்றுகின்ற கோணீ என்பவள் ஸூர்யனுக்கு அர்க்யம் கொடுக்கும்போது அவளது அஞ்சலியிலிருந்தும் அழகிய சிசுவாக கீழே விழுந்தார். விந்தையில் ஆட்பட்ட அவள் அந்தக் குழந்தையை வாரி அணைத்தாள். அவர் பதஞ்சலியானர்.*

**चिदम्बरे नटेशानं दृष्ट्वा सिद्धोऽभवन्मुनिः।**
**पतञ्जलिं करुणया स्वयं देवः समादिशत्॥ ६१॥**

**भाष्यं पाणिनिसूत्राणां विधातुं वार्तिकोपरि।**
**पतञ्जलिः पाणिनीयसूत्राणां भाष्यमातनोत्॥ ६२॥**

चिदम्बरे नटेशानं दृष्ट्वा मुनिः सिद्धः अभवत्। देवः पतञ्जलिं पाणिनिसूत्राणां वार्तिकोपरि भाष्यं विधातुं करुणया स्वयं आदिशत्। पतञ्जलिः पाणिनिसूत्राणां भाष्यं आतनोत्। (नटानां ईशानः, तं। पाणिनेः सूत्राणि, तेषां। वार्तिकस्य उपरि।)

**स्वर्णरङ्गे महाभाष्यमुपदेष्टुमना मुनिः।**
**शिष्यान्प्रतीक्षमाणोऽभून्नटेशेक्षणनिर्वृतः॥ ६३॥**

मुनिः स्वर्णरङ्गे नटेशेक्षणनिर्वृतः, महाभाष्यं उपदेष्टुमनाः (सन्), शिष्यान् प्रतीक्षमाणः अभूत् (स्वर्णमयो रङ्गः, तस्मिन्। महत् भाष्यम्। उपदेष्टुं मनो यस्य। नटानां ईशः, तस्य ईक्षणं, तेन निर्वृतः।)

*தங்கத்தாலான நடன அரங்கில் முனிவரான பதஞ்சலி நடராஜப் பெருமானைக் கண்டதால் மனநிறைவு கொண்டவராக மஹாபாஷ்யத்தைப் போதிக்க விரும்பியவராக சீடர்களை எதிர்பார்த்து இருந்தார்.*

**कदाचिदागतान् शिष्यान् स सहस्रं ततस्ततः।**
**वक्तुं प्रववृते भाष्यं सहस्रस्तम्भमण्डपे॥ ६४॥**

कदाचित्, सः ततस्ततः, आगतान् सहस्रं शिष्यान् सहस्रस्तंभमण्डपे भाष्यं वक्तुं प्रववृते। (सहस्रं स्तंभाः यस्मिन् सः मण्डपः, तस्मिन्।)

*ஒரு சமயம், ஆங்காங்கிருந்து வந்து கூடிய ஆயிரக்கணக்கான மாணவர்களுக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் பாஷ்யத்தை போதிக்கத் தொடங்கினார்.*

**मध्ये जवनिका काचित् लम्बिता गुर्वधीतिनाम्।**
**नान्येन संलपेत्कश्चित् नापगच्छेद्बहिः क्वचित्॥ ६५॥**

**नोत्क्षिपेद्वा जवनिकां सर्वोऽप्यवहितो भवेत्।**
**इत्यादिश्य च्छात्रवर्गं भाष्यं गुरुरुपादिशत्॥ ६६॥**

गुर्वधीतिनां मध्ये काचित् जवनिका लम्बिता। "कश्चित् (अपि) अन्येन न संलपेत्। क्वचित् बहिः न अपगच्छेत्। जवनिकां वा न उत्क्षिपेत्। सर्वः अपि अवहितः भवेत्।" इति छात्रवर्गं आदिश्य गुरुः भाष्यं उपादिशत्। (गुरुः अधीतिनश्च, तेषां। छात्राणां वर्गः, तं।)

*குருவிற்கும் மாணவர்களுக்கும் இடையே ஒரு திரை தொங்கவிடப்பட்டது. "எவரும் மற்றவருடன் பேசக்கூடாது, வெளியே எங்கும் செல்லக்கூடாது. திரையையும் தூக்கக்கூடாது. எல்லோரும் கவனத்துடன் இருக்கவேண்டும்"*

என்று உத்தரவிட்டுவிட்டு மாணவர் வகுப்பிற்கு குரு பாஷ்யத்தை போதித்தார்.

**अष्टौ दिनान्यतीतानि नवमेऽह्नि किमप्यभूत्।**
**गौडदेशागतः कश्चित्पाठमध्ये बहिर्ययौ॥ ६७॥**

अष्टौ दिनानि अतीतानि। नवमे अह्नि किमपि अभूत्। गौडदेशागतः कश्चित् पाठमध्ये बहिः ययौ। (गौडो नाम देशः, तस्मात् आगतः। पाठस्य मध्ये)

*எட்டு நாட்கள் சென்றன. ஒன்பதாவது நாளில் ஏதோ (எதிர்பாராதது) நடந்தது. கௌடதேசத்திலிருந்து (கிழக்கு வங்கம் -ஒரிஸ்ஸாவின் இடையிலுள்ளது) வந்த ஒருவன் பாடத்தின் இடையே வெளியே சென்றான்.*

**उदक्षिपज्जवनिकां शिष्यः कश्चन कौतुकात्।**
**सर्वेऽपश्यन्भीमरूपं स्वगुरुं शेषरूपिणम्॥ ६८॥**

कश्चन शिष्यः कौतुकात् जवनिकां उदक्षिपत्। सर्वे शेषरूपिणं स्वगुरुं भीमरूपं अपश्यन्। (भीमं रूपं यस्य, तं। शेषः रूपं यस्य, तं। स्वस्य स्वेषां वा गुरुः तं।)

*ஒரு சிஷ்யன் குறுகுறுப்பால் திரையைத் தூக்கினான். எல்லோரும் பயங்கர வடிவம் கொண்ட ஆதிசேஷன் உருவிலிருந்த தம் குருவைக் கண்டனர்.*

**क्षणाद्विषाग्निना दग्धान् दृष्ट्वा स्वं रूपमास्थितः।**
**शशाप गौडमायान्तं ब्रह्मरक्षो भवेति सः॥ ६९॥**

सः (पतञ्जलिः) क्षणात् (शिष्यान्) विषाग्निना दग्धान् दृष्ट्वा, स्वं रूपं आस्थितः, आयान्तं गौडं "ब्रह्मरक्षः भव" इति शशाप। (विषस्य अग्निः तेन।)

*அந்த பதஞ்சலி, நொடியில் விஷத்தீயால் எரிக்கப்பட்ட அவர்களைக் கண்டு தன் வடிவை ஏற்றவராக தன்னை நோக்கி*

*வருகின்ற கௌடதேசத்திலிருந்து வந்த மாணவனை பிரும்மராக்ஷஸனுக ஆவாய் எனச் சபித்தார்.*

**शिष्यनाशानुतप्तोऽथ गौडमाहूय सादरम्।**
**मदनुग्रहतो भातु महाभाष्यं तवान्तरे॥ ७० ॥**

**वत्स मागा विषादं त्वं शिष्यस्ते भवितोत्तमः।**
**तस्मै मत्कृतिमध्याप्य शापान्मुक्तो भवेत्यशात्॥ ७१ ॥**

शिष्यनाशानुतप्तः सादरं गौडं आहूय, ''महाभाष्यं तवान्तरे मदनुग्रहतः भातु। वत्स! त्वं विषादं मा गाः। ते उत्तमः शिष्यो भविता। तस्मै मत्कृतिं अध्याप्य शापात् मुक्तः भव'' इति अशात्। (शिष्याणां नाशः, तेन अनुतप्तः। मम अनुग्रहः, तस्मात्। मम कृतिः, तां।)

*(கௌடனைத்தவிர) மற்ற மாணவர்களின் அழிவால் மனம் வருந்தியவராக ஆதரவுடன் கௌடனை அழைத்து ''உன் அறிவில் என் அருளால் மஹா பாஷ்யம் நன்கு தெளிவாகப் புரியட்டும். குழந்தாய்! கலங்காதே! உனக்கு நல்ல சீடன் ஏற்படுவான். அவனுக்கு என் நூலைப் போதித்துப் பின் சாபத்திலிருந்து விடுபடுவாய்'' என ஆணையிட்டார்.*

**इत्थं गुरोः प्राप्य वरं गौडो रक्षोवपुर्धरः।**
**रेवातटे वटेऽवात्सीत् सच्छिष्यावेक्षणोन्मुखः॥ ७२ ॥**

गौडः इत्थं गुरोः वरं प्राप्य, (ब्रह्म)रक्षोवपुर्धरः सच्छिष्यावेक्षणोन्मुखः रेवातटे वटे अवात्सीत्। (रक्षसो वपुः, तं धरतीति सः। सन् शिष्यः, तस्य अवेक्षणं, तस्मिन् उन्मुखः। रेवायाः तटः, तस्मिन्)

*இப்படி கௌடர் குருவிடமிருந்து அருள்வாக்கு பெற்று பிரும்மராக்ஷஸ வடிவமேற்றவராக நர்மதை நதிக்கரையில் நல்லதொரு சீடனை எதிர்பார்ப்பதிலேயே முனைந்தவராக ஆலமரத்தில் தங்கி இருந்தார்.*

**उज्जयिन्याश्चन्द्रशर्माभिधो विप्रवटुस्तदा।**
**अहीश्वरमहाभाष्यमध्येतुं दक्षिणानगात्॥ ७३ ॥**

तदा उज्जयिन्याः चन्द्रशर्माभिधः विप्रवटुः अहीश्वरमहाभाष्यं अध्येतुं दक्षिणान् अगात्। (चन्द्रशर्मा इति अभिधा यस्य। विप्रो वटुश्च। अहीनां ईश्वरः, तस्य महाभाष्यं, तत्।

*உஜ்ஜயினியிலிருந்து சந்திரசர்மா என்ற பெயருள்ள ஒரு அந்தணச் சிறுவன் அப்போது பாம்பரசனுன பதஞ்ஜலியின் மஹா பாஷ்யத்தைக் கற்பதற்காகத் தென்னுட்டை அடைந்தான்.*

**शापार्तं गौडमुद्धर्तुं स्वयं चन्द्रवपुर्धरः।**
**पतञ्जलिः समायात इति प्राहुः पुराविदः॥ ७४॥**

पुराविदः "शापार्तं गौडं उद्धर्तुं स्वयं चन्द्रवपुर्धरः पतञ्जलिः समायातः" इति प्राहुः। (शापेन आर्तः, तं। चन्द्रस्य वपुः, तद् धरतीति।)

*முன்னுள் சரித்திரமறிந்தவர்கள் சாபத்தால் வாடிய கௌடரை கரையேற்றுவதற்காக பதஞ்ஜலி சந்திரசர்மாவின் உடல் தாங்கியவராக வந்தார் எனக் கூறுவர்.*

**निष्ठारूपं पचेर्ब्रूया इति पृष्टः स रक्षसा।**
**पक्वमित्याह तेनासौ नीतस्तुष्टेन शिष्यताम्॥ ६५॥**

"पचेः निष्ठारूपं ब्रूयाः" इति रक्षसा पृष्टः सः "पक्वं" इति आह। तेन तुष्टेन असौ शिष्यतां नीतः।

*பச் என்ற வினைப்பகுதியின் இறந்தகால வினையெச்சம் சேர்ந்த உருவம் சொல்வாய் என அந்த பிரும்மராக்ஷஸனுல் கேட்கப் பெற்ற அந்த சந்திரசர்மா 'பக்வம்' எனக் கூறினுர். மகிழ்ச்சியுற்ற அந்த பிரும்மராக்ஷஸனுல் சிஷ்யராக்கப்பட்டார்.*

**अध्याप्य तं महाभाष्यं त्यक्त्वा रक्षोवपुस्ततः।**
**गौड आशास्य शिष्यं तं प्रतस्थे दिशमुत्तराम्॥ ७६॥**

ततः तं महाभाष्यं अध्याप्य, रक्षोवपुः त्यक्त्वा तं शिष्यं आशास्य गौडः उत्तरां दिशं प्रतस्थे। (रक्षसो वपुः, तत्।)

பிறகு அந்த சந்திரசர்மாவிற்கு மஹாபாஷ்யத்தைப் போதித்து விட்டு பிரும்மராக்ஷஸவடிவை விட்டு, அந்த சிஷ்யனை வாழ்த்திவிட்டு கௌடர் வடக்கு நோக்கிச் சென்றார்.

**तुरीयाश्रममासाद्य गौडो योगीश्वराच्छुकात्।**
**ब्रह्मविद्यामधिजगे बदरीमध्युवास च॥ ७७॥**

गौडः योगीश्वरात् शुकात् तुरीयाश्रमं आसाद्य ब्रह्मविद्यां अधिजगे। बदरीं अध्युवास च। (योगिनां ईश्वरः, तस्मात्। तुरीयः आश्रमः, तं ब्रह्मणः विद्या, तां)

கௌடர் யோகிகளில் சிறந்த சுகரிடமிருந்து நான்காவது ஸன்யாஸமெனும் ஆசிரமத்தை ஏற்று, பரம்பொருளைப்பற்றிய கல்வியைப் பயின்றார். பதரியில் வசித்தார்.

**चन्द्रः श्रान्तश्चिराधीतेः निद्रया मोहमेयिवान्।**
**तं काचिज्जीवयामास नवनीतेन कन्यका॥ ७८॥**

चन्द्रः, चिराधीतेः श्रान्तः निद्रया मोहं एयिवान्। तं काचित् कन्यका नवनीतेन जीवयामास। (चिराय अधीतिः, तस्याः)

சந்திரசர்மா வெகுநாட்கள் தொடர்ந்து கற்றதனால் களைப்பு அடைந்தவராகத் தூக்கத்தால் மயக்கமுற்றார். ஒருபெண் அவரை வெண்ணெய்ப்பூச்சால் தெளிவித்தாள்.

**उवाह तां स तिस्रोऽन्याः कन्या वैदुष्यमोहिताः।**
**चत्वारस्तनया जाताः सर्वे विद्याविदोऽभवन्॥ ७९॥**

सः तां, वैदुष्यमोहिताः तिस्रः अन्याः कन्याश्च उवाह। तनयाः चत्वारः जाताः। सर्वे विद्याविदः अभवन्।

அந்த சந்திரசர்மா அந்தப்பெண்ணையும் (அவரது) கல்விச் சிறப்பில் மயங்கிய மூன்று வேறு பெண்களையும் மணந்தார். நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். எல்லோரும் சிறந்த கல்விமான்களாக ஆனார்கள்.

**निवृत्तोऽभ्यगमद्गौडं स्वगुरुं बदरीस्थितम्।**
**प्राप तुर्याश्रमं तस्य प्रसादाद्ब्रह्मभावदम्॥ ८० ॥**

निवृत्तः बदरीस्थितं स्वगुरुं गौडं अभ्यगमत्। तस्य प्रसादात् ब्रह्मभावदं तुर्याश्रमं प्राप। (बदर्यां स्थितः, तं। तुर्यः आश्रमः, तं। ब्रह्मणो भावः, तं ददाति इति, तं।)

*பற்றற்றவராக சந்திரசர்மா பதரியிலிருந்த தன்குருவான கௌடபாதரைச் சென்றடைந்தார். அவரது அருளால் ஆத்மஞானத்தைத் தரவல்ல நான்காம் ஆசிரமத்தைப் பெற்ருர்.*

**सततं जय गोविन्द पाहि गोविन्द मामिति।**
**निगदन्नन्यतो मौनी गौविन्दाख्यामवाप सः॥ ८१ ॥**

सः सततं "गोविन्द! जय! गोविन्द! पाहि माम्!" इति निगदन्, अन्यतः मौनी, गोविन्दाख्यां अवाप। (गोविन्दः इति आख्या तां।)

*அந்த சந்திரசர்மா எப்போதும் "கோவிந்தா வாழி! கோவிந்தா காப்பாற்று!" என்றே சொல்பவராக வேறு பேச்சற்றவராக இருந்து கோவிந்தர் என்ற சிறப்புப் பெயரைப் பெற்ருர்.*

**व्यासादेशाच्छङ्करार्यमुपदेष्टुं त्रयीशिरः।**
**प्रतीक्षमाणस्तं योगी रेवातीरेऽवसत्सुखम्॥ ८२ ॥**

योगी व्यासादेशात् शङ्करार्यं त्रयीशिरः उपदेष्टुं तं प्रतीक्षमाणः रेवातीरे सुखं अवसत्। (व्यासस्य आदेशः, तस्मात्। शङ्करश्चासौ आर्यश्च, तं। त्रय्याः शिरः, तत्। रेवायाः तीरं, तस्मिन्।)

*கோவிந்தர் (கோவிந்த பகவத்பாதர் என்பர்) வியாஸரது ஆணையால் சங்கரருக்கு உபநிடதங்களை உபதேசிப்பதற்காக அவரை எதிர்பார்ப்பவராக யோகநிலையில் அமர்ந்தவராக நர்மதி ஆற்றங்கரையில் சுகமாக இருந்தார்.*

इति श्रीशङ्करोदन्ते प्रथमो भागः

## द्वितीयः पाठः — பாடம் 2

## ।। श्रीमहिषासुरमर्दिनीस्तोत्रम् ।।

## ஸ்ரீ மஹிஷாஸுரமர்த்திநீ ஸ்தோத்ரம்

**अयि गिरिनन्दिनि नन्दितमेदिनि विश्वविनोदिनि नन्दनुते**
**गिरिवरविन्ध्यशिरोधिनिवासिनि विष्णुविलासिनि जिष्णुनुते।**
**भगवति हे शितिकंठकुटुम्बिनि भूरिकुटुम्बिनि भूरिकृते**
**जय जय हे महिषासुरमर्दिनि रम्यकपर्दिनि शैलसुते ।। १ ।।**

अयि गिरिनन्दिनि *மலைமகளே,* नन्दितमेदिनि *உலகை மகிழ்விப்பவளே.* विश्वविनोदिनि *உலகின் இயக்கத்தை விளையாட்டாகச் செய்பவளே.* नन्दनुते *நந்தகோபனால் வணங்கப் பெற்றவளே.* गिरिवरविन्ध्यशिरोधिनिवासिनि *மலைகளிற் சிறந்த விந்திய மலையின் கொடுமுடியில் வசிப்பவளே.* विष्णुविलासिनि *விஷ்ணுவிடம் (சக்தியாக) விளங்குபவளே.* जिष्णुनुते *அர்சுனனால் வணங்கப் பெற்றவளே.* भगवति *நிகரற்ற செல்வாக்கு. ஆற்றல், புகழ், செல்வம், அறிவு, வைராக்யம் இவைகளுடன் கூடியவளே.* हे शितिकण्ठकुटुम्बिनि *பரமசிவனின் இல்லாளே.* भूरिकुटुम्बिनि *உலகமாம் நிறைந்த பெரும் குடும்பமுள்ளவளே,* भूरिकृते *பலவகைப்பட்ட செயல்கள் உள்ளவளே.* हे महिषासुर मर्दिनि *மஹிஷன் என்ற அசுரனை வதைத்தவளே.* रम्यकपर्दिनि *அழகாகப் பின்னப்பெற்ற கூந்தலுடன் விளங்குபவளே.* शैलसुते *மலைமகளே* जय जय *வாழ்க வாழ்க !*

*விளக்கம்: 'நந்தநுதா' நந்தகோபனுக்கும் யசோதைக்கும் பெண்ணாகப் பிறந்தவள். வஸுதேவர் கிருஷ்ணனை யசோதையிடம் சேர்த்துவிட்டு மாற்றி எடுத்துச் சென்ற மஹாமாயை. "விந்திய சிரோதி நிவாஸிநி" விந்திய*

மலைத்தொடரில் கோயில் கொண்டு உள்ள விந்தியவாஸிநி என்ற துர்க்கை ''விஷ்ணுவிலாஸிநி'' வைஷ்ணவீ துர்க்கை. 'ஜிஷ்ணுநுதா' விராட யுத்தத்திற்கும் பாரத யுத்தத்திற்கும் முன் அர்ஜுனனால் வணங்கப் பெற்றவவள்.

सुरवरवर्षिणि दुर्धरधर्षिणि दुर्मुखमर्षिणि हर्षरते
त्रिभुवनपोषिणि शङ्करतोषिणि किल्बिषमोषिणि घोषरते।
दनुजनिरोषिणि दितिसुतरोषिणि दुर्मदशोषिणि सिन्धुसुते
जय जय हे महिषासुरमर्दिनि रम्यकपर्दिनि शैलसुते॥ २॥

सुरवरवर्षिणि தேவர்கள் கோரியவைகளை வழங்குபவளே. दुर्धरधर्षिणि எதற்கும் அடங்காதவர்களை அடக்குபவளே. दुर्मुखमर्षिणि வாடிய முகத்தோற்றமுள்ள எளியோர்களை அன்புடன் தடவிக் கொடுப்பவளே, हर्षरते ஆனந்தத்தில் மூழ்கி யிருப்பவளே, त्रिभुवनपोषिणि மூவுலகையும் போஷிப்பவளே, शङ्करतोषिणि சிவனை மகிழ்விப்பவளே, किल्बिषमोषिणि (பக்தனின்) பாவங்களை அவன் அறியாவண்ணம் அப்புறப் படுத்துபவளே, घोषरते நான்மறைகள் ஓதுதலில் ஈடுபாடுள்ளவளே, (ஆயர்பாடியில் வசிப்பவளே) दनुजनिरोषिणि தநுவிடம் பிறந்த அசுரர்களிடம் கோப முள்ளவளே, दितिसुतरोषिणि திதியிடம் பிறந்த அசுரர்களிடம் கோபமுள்ளவளே, दुर्मदशोषिणि போக்கிரிகளிடம் உள்ள செருக்கை வற்றச் செய்பவளே, सिन्धुसुते கடல் மகளே, (ஜய ஜய என்று தொடரும் கடைசி அடியின் பொருள் முன்போல).

अयि जगदम्ब मदम्ब कदम्बवनप्रियवासिनि हासरते
शिखरिशिरोमणितुङ्गहिमालयभृङ्गनिजालयमध्यगते।
मधुमधुरे मधुकैटभगञ्जिनि कैटभभञ्जिनि रासरते
जय जय हे महिषासुरमर्दिनि रम्यकपर्दिनि शैलसुते॥ ३॥

जगदम्ब உலகின் அன்னையே, मदम्ब எனது அன்னையே, कदम्बवनप्रियवासिनि அடப்பங்காட்டில் (மதுரையில்) பிரியத்துடன் வசிப்பவளே, हासरते சிரிப்பில் மகிழ்பவளே. शिखरिशिरोमणि तुङ्गहिमालयशृङ्गनिजालयमध्यगते மலைகளுள் ரத்னம் போல் சிறந்த உயர்ந்த இமயமலையின் கொடுமுடியில் உள்ள தனது ஆலயத்தின் நடுவில் இருப்பவளே, मधुमधुरे தேனைப்போல் இனியவளே, (தேனைவிட இனியவளே, தேனில் உள்ள இனிப்பே) मधुकैटभखञ्जिनि மதுவையும் கைடபனையும் அவமதித்தவளே, कैटभभञ्जिनि கைடபனை உருக்குலைத்தவளே, रासरते கோலாட்டத்தில் விருப்பம் உள்ளவளே, (ஜய ஜய ஹே...)

விளக்கம்: உலகிற்குத் தாய், அற்பனான எனக்கும் தாய் ஆனது அவளுடைய தனிப்பெருங் கருணையால். *'ஹாஸரதா'* அவள் வாய்விட்டுச் சிரிப்பது மாயையால் உலகை மயக்க. மதுகைடபன் என்ற இரு அசுரர்கள் உலகம் தோன்றியவுடன் உண்டானவர்கள். விஷ்ணு யோக நித்திரையில் ஆழ்ந்திருந்த போது பிரமனைத் துன்புறுத்தினார்கள். பிரமன் யோக நித்திரையான மஹாமாயையைத் துதிக்க விஷ்ணு நித்திரை நீங்கி மஹாமாயையின் உதவியால் மதுவையும் கைடபனையும் வதைத்தார் எனதேவீமாஹாத்மியம் கூறும்.

**अयि शतखण्ड विखंडितरुण्ड वितुण्डितशुण्डगजाधिपते**
**रिपुगजगण्ड विदारणचण्ड पराक्रमशुण्ड मृगाधिपते।**
**निजभुजदण्ड निपातितखंडविपातितमुण्डभटाधिपते**
**जय जय हे महिषासुरमर्दिनि रम्यकपर्दिनि शैलसुते॥ ४॥**

शतखण्ड विखण्डित-रुण्ड-वितुण्डित-शुण्ड-गजाधिपते நூறு துண்டுகளாக வெட்டப்பெற்ற தலையற்ற உடல்பகுதி (முண்டம்)யும் அறுக்கப்பட்ட துதிக்கையும் உள்ளவனாக யானைப்படைத்தலைவனை ஆக்கியவளே रिपुगज-गण्ड - विदारण - चण्ड-पराक्रम - शुण्डमृगाधिपते எதிரியானைகளின் கன்னங்களைப்

பிளக்கவல்ல வலிவுள்ள சிங்கத்தை (வாகனமாக)க் கொண்டவளே निज भुज दण्ड निपातित खण्ड-विपातित मुण्डभटाधिपते தனது வலிவுள்ள கைகளால் துண்டு துண்டாக முண்டன் என்ற அஸுர சேனைத் தலைவனை வீழ்த்தியவளே, (ஜய ஜய ஹே...)

விளக்கம்: சும்பன் நிசும்பன் என்ற அசுரர்கள் இருவர், மஹா ஸரஸ்வதியாகத் தோன்றி தேவி அவர்களை அழிக்கிறாள். அவளது வாஹனமான சிங்கம் யானைப்படையை அழிக்கிறது. தேவியின் மற்றொரு அம்சமான சாமுண்டாதேவி முண்டனை அழிக்கிறாள் என தேவீ மாஹாத்மியம் கூறும்.

**अयि रणदुर्मद शत्रुवधोदित दुर्धरनिर्जर शक्तिभृते**
**चतुरविचार धुरीणमहाशिव दूतकृत प्रमथाधिपते।**
**दुरितदुरीह दुराशयदुर्मति दानवदूतकृतान्तमते**
**जय जय हे महिषासुरमर्दिनि रम्यकपर्दिनि शैलसुते॥ ५॥**

रणदुर्मद शत्रुवध-उदित दुर्धरनिर्जर शक्तिभृते யுத்தத்தில் பெருமதம் பிடித்த எதிரிகளை அழிக்கக் கிளம்பி, எதிரிகளால் தாங்க வொண்ணாதவாறு எல்லா தேவர்களின் சக்தியையும் தனக்குள் அடக்கி நிற்பவளே, चतुरविचार-धुरीण महाशिवदूतकृतप्रमथ अधिपते சிறந்த திறமைசாலியும். ஆத்ம விசாரத்தின் முன் நிற்பவருமான பரமேச்வரனைத் தனது தூதராக ஆக்கியவளே, दुरित दुरीह-दुराशय दुर्मतिदानवदूतकृत अन्त मते முன் செய்த தீவினைகளின் பயனாகக் கெட்ட செயல்களில் ஈடுபாடும் கெட்ட எண்ணமும் கெட்ட புத்தியும் உள்ள (சும்பன் என்ற) அசுரனின் தூதனிடம் தனது தீர்மானத்தைத் தெரிவித்தவளே (ஜய ஜயஹே..)

விளக்கம்: சும்பன் முதலான அசுரர்களின் துன்புறுத்தலைத் தாங்காத தேவர்கள் தேவியை வேண்ட தேவி எல்லா தேவசக்தியும் ஒருங்கே கொண்டவளாகத் தொன்றுகிறாள்.

கெட்ட எண்ணம் கொண்ட சும்பன் தேவியின் அழகில் மயங்கித் தன்னை மணக்கத் தேவியிடம் தூதனை அனுப்பத் தன்னை வென்றால் மணக்கலாம் எனத் தூதனிடம் தேவி பதில் அனுப்புகிறாள். யுத்தத்திற்காகப் புறப்பட்ட அசுரனிடம் "இந்திரனிடம் மூவுலகை ஆளும் பொறுப்பைவிட்டுப் பாதாளம் செல்" எனப் பரமசிவனைத் தூதனுப்புகிறாள் என தேவீ மாஹாத்மியம் கூறும்.

**अयि शरणागत वैरिवधूवर वीरवराभयदायिकरे**
**त्रिभुवन मस्तक शूलविरोधि शिरोधिकृतामल शूलकरे।**
**दुमिदुमितामर दुन्दुभिनाद महो मुखरीकृत तिग्मकरे**
**जय जय हे महिषासुरमर्दिनि रम्यकपर्दिनि शैलसुते॥ ६॥**

शरणागत-वैरिवधूवर-वीरवर-अभयदायि करे சரணடைந்த எதிரிகளின் மனைவியருக்கும் உயர்ந்த வீரர்களுக்கும் கோரிய வரங்களையும் அபயத்தையும் கைகளால் வழங்குபவளே, त्रिभुवन-मस्तक-शूल विरोधि-शिरो-अधिकृत-अमलशूल करे மூவுலகிற்கும் தலைவலியாய் இருந்த எதிரிகளின் தலைகளில் செருகி உருவப்பட்ட தூய சூலத்தை ஏந்திய கைகளுள்ளவளே, दुमिदुमित-अमरदुन्दुभि-नादमहो-मुखरीकृत-तिग्म करे துமி துமி என முழங்கும் தேவர்களின் துந்துபி வாத்தியங்களின் பேரொலியால் சூரிய லோகம் வரை எதிரொலிக்கச் செய்தவளே. (ஜய ஜய ஹே....)

விளக்கம்: சும்பன் நிசும்பன் முதலான அசுரர்கள் வீழ்ந்த பிறகு மிகுந்தவர்கள் சரணடைய, தேவி அவர்களுக்குத் தஞ்சம் அளித்துக் கோரியவைகளை வழங்குகிறாள்.

**अयि निजहुं कृतिमात्र निराकृत धूम्रविलोचन धूम्रशते**
**समरविशोषित शोणितबीज समुद्भवशोणित बीजलते।**
**शिव शिव शुम्भ निशुम्भमहाहव तर्पित भूत पिशाचरते**
**जय जय हे महिषासुरमर्दिनि रम्यकपर्दिनि शैलसुते॥ ७॥**

निजहुंकृतिमात्र-निराकृत-धूम्र विलोचन-धूम्रशते தனது ஹூம் என்ற முழக்கத்தாலேயே புகைபடர்ந்தாற்போல பயங்கரமான கண்களையுடைய தூம்ரலோசனன் முதலான நூற்றுக்கணக்கான அசுரர்களை மாய்த்தவளே. समरविशोषित-शोणित-बीज समुद्भव-शोणितबीज-लते யுத்தத்தில் ரக்தபீஜன் என்ற அசுரனின் உடலில் இருந்து சிந்திய ரத்தத் துளிகளிலிருந்து கொடிபோலத் தொடர்ந்து கிளம்பிய பல ரத்தபீஜர்களை (சிந்திய ரத்தபீஜனின் ரத்தத்தைக் குடிப்பதின் மூலம்) அழித்தவளே. शिव शिव மங்களம் உண்டாகட்டும், மங்களம் உண்டாகட்டும். शुम्भ निशुम्भ-महाहव-तर्पित-भूतपिशाच-रते சும்பனோடும் நிசும்பனோடும் நிகழ்ந்த பெரும் போரில் பூதங்களையும் பிசாசங்களையும் ரத்தபானத்தால் திருப்தி அடையச் செய்வதில் ஈடுபட்டவளே. (ஜய ஜயஹே)

விளக்கம்: சும்பனின் ஏவலால் தேவியைப் பிடிக்க தூம்ரலோசனன் என்ற அசுரன் பல அசுரர்களுடன் வருகிறான். அவனைத் தேவி தனது ஹூங்காரத்தால் சாம்பலாக்குகிறாள். ரத்த பீஜனின் சரீரத்திலிருந்து பூமியில் சிந்தும் ஒவ்வொரு ரத்தச் சொட்டிலிருந்தும் அவனை ஒத்த மற்றொரு ரத்தபீஜன் கிளம்புவான். அப்படி ஒருவரபலம். தேவீ காளியை அனுப்பி அவனது உடலில் இருந்து சிந்தும் ரத்தத்தை ஒரு சொட்டுகூட பூமியை அடையாதவாறு குடிக்கச் செய்கிறாள். ரத்தபீஜன் அழிகிறான் என தேவீ மாஹாத்மியம் கூறும்.

**धनुरनुसङ्गरणक्षणसङ्ग परिस्फुरदङ्ग नटत्कटके**
**कनक पिशङ्गपृषत्कनिषङ्गरसद्भटशृङ्ग हतावटुके।**
**कृतचतुरङ्ग बलक्षितिरङ्ग घटद्बहुरङ्ग रटद्बटुके**
**जय जय हे महिषासुरमर्दिनि रम्यकपर्दिनि शैलसुते॥ ८॥**

धनुरनु-संगरण-क्षणसंग-परिस्फुरत्-अंग-नटत्कटके வில்லை இழுப்பதில் நொடியில் முன்னும் பின்னும் செல்வதால்

*பளிச்சிடும் கைகளில் விளையாடும் வளைகள் உள்ளவளே.* कनकपिशंग पृषत्कनिषंगरसद्भट-शृङ्गहत अवटुके *தங்கப்பூணிட்ட அம்புகள் நிரம்பிய அம்புறுத் தூணியாலும் எக்காளமிடும்யுத்த வீரர்கள் தாங்கத்தக்க கொம்பு வாத்தியத்தாலும் இடிக்கப்பெற்ற பிடரி (காதின் கீழ் கழுத்தின் இருபுறங்கள்)ப் பகுதியுள்ளவளே* कृत-चतुरंगबल क्षितिरङ्ग-घटद्बहुरंग-रटद्बटुके *(குதிரைப்படை, காலாட்படை, ரதப்படை, யானைப்படை என) நான்கு பகுதிகளாகப் பிரிக்கப்பெற்ற சேனைகளுடன் போர்க்களத்தில் தனித்துப் பொருதுபவரும், பலபோர் அரங்குகளில் ஒரேசமயத்தில் பல உருவங்களில் முழக்கமிடுபவருமான வடுக (சிறுவன் உருவிலுள்ள) பைரவருடன் கூடியவளே. (ஜய ஜயஹே..)*

விளக்கம்: *தேவி யுத்த அரங்கில் தோன்றும் அழகும் அவளது சேனையில் முன்னணி வீரனாக இருக்கும் வடுக பைரவரின் போர்க்கோலமும் இந்த சுலோகத்தில் சித்தரிக் கப்படுகின்றன.*

**जय जय जप्यजये जयशब्दपरस्तुति तत्पर विश्वनुते**
**भण भणभिंजिमि भिंकृतनूपुर शिंजितमोहित भूतपते।**
**नटितनटार्ध नटीनटनायक नाटितनाट्य सुगानरते**
**जय जय हे महिषासुरमर्दिनि रम्यकपर्दिनि शैलसुते॥ ९॥**

जप्यजये *பாராட்டத்தக்க வெற்றியுடன் கூடியவளே,* जयशब्दपरस्तुतितत्पर विश्वनुते *வாழ்க என்ற கோஷமிடுவதில் ஈடுபட்டவர்களும், துதிப்பதில் ஈடுபட்ட வர்களுமாக உள்ள உலகத்தினால் வணங்கப்பெறுபவளே.* भणभण-भिञ्जिमि भिंकृतनूपुर शिञ्जितमोहितभूतपते *பண - பண-பிஞ்சிமி-பிம் என ஒலிக்கும் சதங்கைகளின் ஒலியால் சிவனை மயக்குபவளே,* नटितनटार्धनटीनटनायकनाटितनाट्यसुगानरते *ஆடல், பாடலில் ஈடுபட்டுள்ள நடிகன், பின்னணி நடிகன், நடிகை, நடிகர் தலைவன் இவர்களது ஆடலிலும் பாடலிலும் ஈடுபடுபவளே! (ஜய ஜயஹே...)*

